1047

1047

கூனூர் செந்தமிழ் நிலையப் பிரசுரம் 1.

உ
கணபதி துணை.

# அறிவு நெறி.

இஃது
அமைப்புச் செய்தவர்
மதுரைத்
தமிழ்ச் சங்கப்பண்டிதரும்,
திருக்குறள் உரைநுணுக்கத்தொகுப்பு,
சித்தாந்தசைவாகரத்
தொகுப்புகள் செய்கின்றவரும்,
கூனூர் திருவருணிலைய நிதியின் தலைவருமாகிய
கூனூர், ஸ்ரீமாந்

**N. இராமசாமி பிள்ளையவர்கள்.**

பதிப்பினர்
ஆ. கருப்பண்ண பிள்ளையவர்கள்,
வெல்லிங்டன்.

கூனூர், விக்டோரியா அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

1934.

...கள்
...க.

ஸ்ரீமுக
ஆண்டு.

15 FEB 1934
MADRAS

R6
N34
85864

உ

கணபதி துணை.

# அறிவு நெறி.

இஃது

அமைப்புச் செய்தவர்,






மதுரைத்

தமிழ்ச் சங்கப்படிப்பினரும்,

திருக்குறள் உரைநுணுக்கத்தொகுப்பு, சித்தாந்தசைவாகரத்

தொகுப்புகள் செய்கின்றவரும்,

கூனூர் திருவருணிலைய நிதியின் தலைவருமாகிய,

கூனூர், ஸ்ரீமாந்

**N. ராமசாமி பிள்ளையவர்கள்.**

பதிப்பினர்

ஆ. கருப்பண்ண பிள்ளையவர்கள்,

வெல்லிங்டன்

1934.


உரிமைகள் ஆசிரியர்க்கே.



௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முன்னமைப்பு.

---

இவ்வுலகத்துப் பிறவிகள் பலவற்றுள்ளும், மனிதப் பிறவி உன்னத முடையதென்பது அனைவரும் ஒப்ப முடித்துக் கட்டியதொன்று. அதனினுங் கல்வி கேள்விகளுடைய பிறவி உன்னதம். அதனினும் உலகம், உயிர், கடவுள், என்னும் முப்பொருள்களி னிலையுணர்ந்து வாழ்தலுடைய, பிறவி உன்னதம். இவற்றில் முதன் முதல் உணர்தற்கானவைகள், உலகம், உயிர், கடவுள், என்னும் இம் முப்பொருள்களே. இவற்றை, இந்த அறிவு நெறி, என்னும் வெண்பா நூல், மிக எளிதாக அனைவரும் படித் துணரத்தக்க நெறியில், விளக்கிக் காட்டிக்கொண்டு செல்லும். கூடுமானவரையில் பொருள் ஆற்றொழுக்கிலேயே அமைந்து வரவும், செம்மை சான்ற மொழிகளே இயலவும், சுருக்க விளக்கம் பெறத், திருவருட் டுணைகொண்டு வெண்பாவினால், இதனை யான் முற்றுவித்தேன்.

உலகில் நிகழ்தலான சமயங்கள், பலவற்றுள்ளும், நமது மெய்கண்டதேவர், எடுத்துக்கொண்ட சமயம் அத்துவித சித்தாந்த சைவம். உத்தி, சுருதி, அனுபவங்களால், முரண் அமையாதிருப்பது. திருவருளால், நுனித்த உணர்வினர்களுக்கு, இந்த அத்துவித சித்தாந்த சைவத்தினது, அருமை, பெருமை, தெரியவரும்.

ஓர் ஊருக்கு, வழிகள் பலவாதல் போலவும், எல்லா ஆற்றுநீரும், கடலையே அடைதல்போலவும், எல்லாச் சமயங்களும், கடவுளை அடையும் மார்க்கமெனப் பெரும் பான்மையோர், அமையாப் பொருள்வரச் சொல்வதுண்டு. அது தவறே. ஊர்வழி யுவமையும், ஆற்றுநீருவமையும், சமையத் தாபனத்துக்குச் சமைந்த பொருத்த வுவமைகளல்ல. உவமைப் பொருத்த மல்லாதவைகளைப் பொருத்தங்காட்டிப் பேசுதல், உழப்பித் துயருழப்பிப் பதேயாகும். ஊர்வரையிற் போகும் வழிபோல, முன்னர்க் காணப்பட்டு, வர வர ஒன்றுந்தெரியாமல், திகைக்கப்பட்டு பின் திரும்பும் வழியு முளது. அன்றிக் கானகம், கானியாறு, மலைப்பரப்பு முதலியவைகளால், ஊர்வரை செல்ல முடியாமல், திரும்பும் வழியுமுளது. அன்றிக் கொல்லுதற் றொழிற்கான, யானை, புலி, சிங்கம், கரடி முதலியவைகளால், ஊர்வரை செல்ல முடியாமல், திரும்பும் வழியுமுளது. இவையனைய பிறவு மமையுமென்க. ஆறுகளிற் பல, இடைத் தேசத்திலேயே, நீர் குறைந்தனவும், பிற ஆற்றுடன் கலப்பனவும், மேற்றிசை நோக்கிச் செல்வனவுமாகக் காணப்படுகின்றன. இவையனைய பிறவுமமையுமென்க.

உவமையின் தோற்றங்கள் நான்கெனவும், அவை வினை, பயன், மெய், உருவம் எனவும், ஆசிரியர் தொல்காப்பியனர், "வினை பயன் மெய்யுரு வென்றநான்கே,
வகைபெற வந்த உவமத் தோற்றம்,"
என விதி நியமனஞ் செய்து வைத்தனர். அந்நான்கின் கண் இவ்வுவமங்கள், வினையுவமையின் பாற்பட்டுச் சில பிறழ்ந்தும், உறழ்ந்தும், ஒவ்வா நிலை பெற்றமையின், இவ்வுவமை கூறல் முழுவதுந் தவறென, அமைக.

சித்தியார் பரபக்கத்தில், சகலாகம பண்டிதர், சமயமியாவும், ஒரு கடவுளைக் குறித்தற்காகு மென்பதனை மறுத்து விளக்குவார் போன்று. "கனகவரை குறித்துப் போய் கடற்கே வீழ்வர்" என இரங்கியருளினராவர்.

உடலிலுள்ள உறுப்புகள் பலவற்றில், ஒவ்வொன்றும் அங்கமாகக் காணப்படினும், பொருளைக் காட்டி உவப்பூட்டுவது கண்ணென்றேயாம். ஏனைய அவைய வங்கள் ஒளியைப் பெற்றுப் பிற பொருள்களைக் காட்டி நிற்றற் கியலாதனவேயாம். ஆகலின், இக்கண்போல, நம் அத்வைத சித்தாந்த சைவம், திருவருளையும், சிவத்தையும், திறப்பித்துக் காட்டித் திகழும். உடற்கண்ணுள்ள, கை, கால் முதலிய, ஏனைய அங்கங்கள் போலாம் பிற சமயங்கள் என்க.

நம் சைவம், பிற சமயங்களை யெல்லாம் அங்கமாகக் கொண் டமைவதன்றிப் பங்கம் பகர்வதின்று. பிறவிக் குருடர்கள் யானையைத் தடவி, ஒவ்வொருவரும், ஒவ்வோ ரங்கத்தையும், யானையுருவம் இதே இதே யென்றனர். கண்ணொளி நலத்தர் ஒருவர், யானையின் முழுவுருவையும் பார்த்து, முன்னையார் கூறிய அங்க அமைப்பு, ஒவ்வொன்றும், யானைக்கு அமைந்தது என்பதுபோலெனத் திராவிடமாபாடிய ஆசிரியர், திறம்படப் பேசி உவமை நிரூபணஞ் செய்யு மழகு மிக உயர்வு அமைந்ததாகும்.

இத்தகைய, விழுமிய நிலை வாய்க்கப்பெற்ற, மேலைய சைவத்தின் திறம் பலவற்றை இந்நூல், பாராட்டிச் சீராட்டி விளக்கும் பண்பை, படிப்பார் கேட்பா ரிருவரும், அறிவர். வெண்பா யாப்பால், இங்ஙனம் எளிய நடையும், அரிய பொருளும், அமையப்பாடுமாறு தூண்டினவர், இவ்வூர், St. Antoney's High School, Tamil Pandit, திருவாளர், V. S. வெங்கடராமன் அவர்கள். "வறப்பினும், வளந்தரும், வண்மையு மலைக்கே" என்பதுக்கொப்ப, இவர்கள் தமது கல்லூரி நேரத்தின், ஒழிவிலெல்லாம் இனிய பல கூறி, இந்நூல், முற்றுமாறும் அச்சுப்பொறி யுலாவுமாறும் முன்னின்றனர். தமிழறிஞர்களில் பெரும்பான்மை, உறுமை, பொறுமை, யறுமையாகிய, இந்நவீன நாகரீக காலத்தில், V.S.V. அவர்களது, நண்பும், பண்பும் என்னுற் பாராட்டிப் பேசற்பாலனவேயாம்.

இவ்வறிவு நெறி நூலின்கண் குணங்கள் காணப் படின், அவை திருவருளின் பிரேரிப்பு எனவும், குறை கள் காண்டலுறின், எனது குணவயப் பிறழ்ச்சி என வும் கருதி யமைகவென, "நெஞ்சத்து நல்லமியாம்" என்னும், நடுவு நிலைமை யமைந்த கல்விப் பெரியார்களை வணங்குகின்றேன். அல்லார்களுக் காற்றும் வணக்கங் களெல்லாம் பொல்லாங்கிற் புகுத்துமாதலின் அவை கிடக்க.

இப்பொழுது, யான் ஆய்வு செய்துவரும், மெய் கண்ட சாத்திரம் பதினான்கில், இலை மறை கனிபோ லுள்ளவைகளை யெல்லாம், இலைப்புரை கிளைத்துப் பிற் றைத் தொகுப்புசெய்து "அத்துவிதசித்தாந்த சைவாகரம்" எனப்பெயர் தந்து வெளியிட உட்கோள் உளது. எல்லாம் வல்ல இறைவன் திருவருள் துணை புரிதல் வேண்டும். "இவ்வறிவுநெறி" புத்தகத்தை யாவரும் படித் துணர வேண்டும், என்ற கருத்துக் கொண்டே, முன்னமதாக வெளியிட்டுள்ளேன்.

புத்தக உருவத்தைப்பார்த்தவர்கள், மலைவேலையும் *விலைவேலையாக ஆனதெனக்கூறக் கண்கவர்வனப்புச் செய்த "விக்டோரியாஅச்சியந்திரசாலை" யார்க்கும், அவ்வச்சியந்திரசாலை, எனது நண்பர் திருவாளர், (ஓட் டுப்பட்டரை) M. ஐயாச்சாமி பிள்ளையவர்களுக்கும் என் நன்றி உரியது. நன்றாக.

* விலைவேலை—மதிப்பானவேலை.

நீலாசலந்தழீஇய,
கூனூர்.
திருவருணிலையம்,
மவுண்ட் ரோடு.
1-1-1934.

இங்ஙனம்
N. ராமசாமி பிள்ளை.

உ

சிவமயம்.

கோயமுத்தூர் தமிழ்ச்சங்கத்தின் அதிபரும்,
அத்துவித சித்தாந்த சைவ நூலாய்வினரும்,
சிவாத்துவித மஹோன்னத வுபந்நியாசகரும்,
Member of the Senate and of the Acadamic Council,
University of Madras,
எனும் பதவியை வகிப்பவரும், கட்டளைச் சட்ட
அறிவிற்குக், கவினுந்திறத்தரும் ஆகிய
உயர் சைவத்

## திருவாளர், C. K. சுப்பிரமணிய முதலியார், B. A. அவர்கள் பாடியது.

நாகரிக மென்றதொரு நற்பேராற் றுன்மார்க்கத்
தேகியுழல் பேதை யுலகோர்மேல்—மாகருணைப்
பாலே அறிவுநெறி பாலித்தல் பண்பெனவே
மேலோர் புகல்வார் மிக.

பேதை யுலகம் பிழைநெறியிற் சார்ந்தொழிந்து
வாதைப் படாவண்ணம் மன்றுடையான்—காதலுறச்
சொன்ன சிவஞானத் தூநெறியே சேர்ந்துய்ய
முன்னவர்கள் செய்தார் முறை.

செறிவிற் சிவன்கழல்சேர் சித்தாந்த வுண்மை
"அறிவுநெறி" ஆராய்ந் தறைந்தான்—பிறநெறியின்
இல்லாச் சிறப்பி னிராமசா மிப்புலவன்
நல்லார் நயந்திடவே நன்கு.

---

கோயமுத்தூர் ஜில்லா கல்விச்சங்கத்தின் தலைவரும், கல்வெட்டு ஆராய்ச்சி காண்டலில் வல்லுநரும், கோவைத் தமிழ்ச்சங்க நிர்வாகரும், அரும்பெரும் வழக்கறிஞருமாகிய, உயர் திருவாளர்
ராவ்சாஹிப்,

## C. M. இராமச்சந்திர செட்டியார், B.A.,B.L., அவர்கள் இயற்றிய, சிறப்புக்கவிகள்.

அத்துவித சித்தாந்தத் தாழ்ந்த வரும்பொருளைப்
பத்துவிரி பத்தாம்வெண் பாக்களினால்—வித்திட்டான்
பைந்தமிழிற் சைவப் பயிர்வளர்ப்பா னெண்ணமுடன்
ஐந்தமிழுங் கற்ற வவன். 1

அவன்றந்த நூலோ வறிவுநெறிப் பேராற்
சிவன்றந்த வாகமத்தைத் தேர்ந்து—தவந்தந்த
சீர்மொழியாற் பாரோர் தெளிவடைய முன்வருமால்
*நேர்மொழியா னெஞ்சினிலே நின்று. 2

குறிப்பு—*நேர்மொழியால் நெஞ்சு எனப்பிரிக்க.

அவனூரோ நீலா சலமார்ந்த கூனூர்
அவன்புலவ னென்னிராம சாமி—அவனறிவோ
சித்தாந்த சாத்திரமுஞ் சீர்பெற்ற முத்தமிழின்
வித்தார்ந்த தன்மையுமே யாம். 3

---

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்,

திருவாளர்

பண்டித, ந. மு. வேங்கடசாமி நாட்டார்

அவர்கள் பாடியது.

மறுவில்சித் தாந்த மதிநூல்கள் கண்டே
"அறிவுநெறி" நூலொன் றறைந்தான்—செறிவுடனே
இன்பா ரிராமசா மிப்புலவ னென்பாலும்
அன்பானிந் நூனல் லமைப்பு.

ஈரோடு, மஹாஜன ஹைஸ்கூல்

தலைமைத் தமிழ்ப் பண்டிதரும்,

மஹா மஹோபாத்தியாயப் பதவித்தரத்தரும்,

உன்னத சைவ வுபந்நியாசகரும், இந்நூலாசிரியரின்

இனிமை நண்பரும், அன்பருமான,

திருவாளர்,

ந. சிவபாதஹிருதயம் பிள்ளை யவர்கள் பாடிய

சிறப்புக் கவிகள்.

வானூர்ந் துலவு *மலைநீலந் தான்விளந்த
கூனூர் தமிழ்மலையாக் கொண்டிருப்போன்—தேனூறுஞ்
சொல்லா லறிவுநெறி சொன்னனெந் நூலுக்கும்
வல்லான்சொ னன்னயமே வாய்ந்து.

குறிப்பு —*மலைநீலம், என்பதனை நீலமலையென மாறுக.

சங்கத் தமிழ்நூற் றவழ்பொருளைக் கண்டெவருஞ்
சங்க நயப்புரைகள் சொல்சதுரன்—மங்கலஞ்சேர்
அத்துவித சித்தாந்த சைவ வருட்சுவையே
தித்திக்கு மிந்நூல் சிறப்பு.

அத்துவித சித்தாந்த சைவத் தரும்பொருளாம்
வித்தகத்திற் றன்னுளமும் விற்றவனே—எத்திறத்தும்
நண்புக் கினிய நயப்பா னதற்கியைந்த
பண்பா னிவற்கெம்பா பண்பு.

*போதஞ் சிவஞான சித்தி †பிரகாசம்
வாதமுட னுய்ந்தபெரு வாலறிவன்—ஏதங்கள்
இல்லாநா வல்லா னிராமசா மிப்புலவன்
பல்லாண்டு வாழ்க படர்ந்து.

குறிப்பு—*போதம்–சிவஞானபோதம். †பிரகாசம்–சிவப்பிரகாசம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# சிறப்பியற் புகழ் மொழி.

**நீலமலை தழீஇய, கூனூர், அர்ச். அந்தோணியார், உயர்தரக் கல்லூரித் தமிழாசிரியன்,**

## வரகூர், சி. மருணீக்கியழகன்

**(V. S. Venkataraman, Vidwan)**

இயற்றியவை.

கற்றூரோர் நுண்புலஞ்சேர் கல்லா வுரமுடைய
கற்றோர்க்குத் தான்வரம்பாங் கற்பமை—வுற்ற
* அழகிறைவன் செய்தா னறிவுநெறி நூலை
யழகிதாய் வாழ்க விது.

* அழகிறைவன்–இராமசாமிப்பிள்ளை அவர்கள்.

யாவுந் தெளிந்தோர்ந்து யாப்புறவாய் வெண்பாவால்
சீவன் சிவமுல கிம்மூன் றும்—யாவருக்கும்
ஊழின் மொழிந்தாற்கு மொண்ணீர்பெய் கொண்டற்கு
மாழியுல கென்னாற்று மற்று.

தெண்ணீர்த்துந் தென்றமிழ்ச் செந்நடை யேய்ந்ததுவும்
வெண்மைமண மில்லதுமா மிந்நூலை—யாணரென
வின்றமிழர் பெட்டாங்கு பெற்றோதி யின்புறுக
வின்றமிழ்தி னின்புதரு மீது.

யாங்கூற வேட்டவீர் யாதுளதா லீதேபோல்
யாங்குமிலை யென்பே மெதிர்ப்பது—யாங்ஙன்
மொழிவீரேற் சொன்மின் ஞெழிவீரேற் போமின்
மொழிவதேன் மூழைநா மொண்டு.

**ஈரோடு வித்துவானும், கம்பன் கவிப் பிரசங்க கர்ணு மிருதமும், இந்நூலாசிரியரின் இனிதமை நண்பருமான, திருவாளர், M. R. சுப்பராயலு ரவுத்தையா, அவர்கள் பாடியது.**

உண்மை யுணர்ந்துலக வாழ்க்கை தலைச்கூடார்
*உண்மை மிகுந்தயர்வி லுற்றிடப—விண்ணவரூர்
இன்னமுதே யென்ன விராமசா மிப்புலவன்
சொன்னு னறிவுநெறி சூழ்ந்து.

* உண்மை என்பதனை, உள்-மை எனக் கண்ணழித்து மனத்துமாசு, எனப் பொருளமைவு செய்க.

உ

சிவமயம்.

## சிறப்புக்கவி.

வித்வான்,

## திருவாளர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்

**தமிழ்ப் பண்டிதர் மகாஜன ஹைஸ்கூல், ஈரோடு.**

**சாற்றுக்கவி.**

சந்தன மரமுங் காரகிற் குறடுந் தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுற் ஞெளிரு நீலமா குன்றந் தன்னிடை விளங்குமா கூனூர்ச்
செந்தமிழ்ப் புலவ னென்றரு மணியாய்த் திகழுவோ னறிவுநூல் [வெண்பாச்
சந்தமுற் றிலகச் செய்தன னிராம சாமிநற் றமிழர்தம் விருந்தே.

**கூனூர், நகரசபையாட்சிப் பாடசாலைத் தமிழ்ப் பண்டிதர், திருவாளர்,**

## கோவை, ந. நமசிவாயம் அவர்கள் பாடிய சிறப்புக் கவிகள்.

அன்புக் கெளியனன் பில்லார்க் கரியன்சீர்
என்புநெகப் பாடு மியலமைந்தோன்—கன்னலெனச்
சொன்னு னறிவுநெறித் தூயதமிழ்ப் பாவிருந்தாப்
பொன்னவிரும் வெண்பா புதிது.

கூனூர் *தமிழ்மலையாக் கொண்டினிது தானிருப்போன்
தேனூறுஞ் சொல்லே திகழவைப்போன்—பாநூறும்
பின்னிரண்டு மாகப் பிறங்கவெளி யிட்டுயர்ந்தான்
தன்னிகரு நூனற் றரம்.

குறிப்பு—*தமிழ்மலை-பொதியமலை.

தராதலத்தி லுள்ள தமிழறிஞர் போற்று
மிராமசா மிக்கவிஞ னென்பான்—பராவவே
இன்னும் பலநூ லமைக்க திருத்தில்லைப்
பொன்னம் பலவனருள் பூத்து.

உ

திருச்சிற்றம்பலம்.

## இந்நூலாசிரியரின் மாணவரும், மன்னார்குடியில் வசிப்பவரும், இளந்தமிழ்ப் புலவருமான, திருவாளர், சி. ராஜகோபால நாயுடு அவர்கள் பாடிய சிறப்புக் கவிகள்.

### 6 சீரடி.

விளங்குமுகிற் பகற்காண மேவிவருங்
கண்கொள்ளாக் கவின்பூஞ் சோலை
வளங்குமுறு வரையருவி மலையரா
வெனநீளுங் கூனூர் மன்னிக்
களங்குதவிர் பெரும்புலமைக் கவின்விளங்குந்
திருவாளன் கண்ணுதற் சீர்
உளங்குலவு முல்லாசன் இராமசா
மிப்புலவ னுயர்சல் லாபன். 1

அம்பலத்தே மனந்திருப்பி வழிபடுவா
ருரிமையன்பிற் காகார் செம்பொன்
அம்பலத்தே யம்பிகையார் கண்ணகங்கள்
களிகூர நிருத்தங் காட்டும்
அம்பலத்தே முடிகளங்க ளமைத்தபிரா
னம்புசத்தா ளகங்கொண் டேத்தும்
அம்பலத்தே நல்லவிசை யவர்களிப்பச்
சிவஞானத் தமர்ந்த மேலோன். 2

குறிப்பு-முதலடிக்கு, அம்-பலம் எனப்பிரிக்க. பலம்-பயன். இரண்டாவதடிக்குச், செம்பொன்னம்பலம், எனப் பொருத்திக்கொள்க. மூன்றாவதடிக்கு, அம்பு-ஆலம் எனப்பிரித்து, ஜலமும் விஷமுமெனப் பொருளமைக்க. ஆலம், என்பது அலம் எனக்குறுகி நின்றது.

கங்கையை முடியிலும், விஷத்தைக் கண்டத்திலும் அமைத்த பிரானென, நிரனிறைப் பொருளியைக்க. நான்காவதடிக்கு, அம்பலம்-பொது இடம், என்பது பொருள்.

கோதுபதி மனப்புலவர் * குறும்பறிவு
புறம்போட்டுஞ் சுகுண னின்னுன்
தீதுபதி யாதவரைத் தெருட்டிசிவ
ஞானநூற் றிறஞ்செய் வோன் † பூ
மாதுபதி திருவருளி னிலையநிதி
மகிபாலன் மணஞ்சேர் சொல்லாற்
சேதுபதி மனமகிழச் செந்தமிழ்மா
லிகைபுனைந்த சீமான் மாதோ. 3

குறிப்பு-*குறும்பு-அறிவு எனப்பிரிக்க. †பூமாதுபதி-இலக்குமி விலாசமுள்ள.

பாவிருக்க †மருட்பானம் பழகிமயற்
கிடப்பார்போற் பாரிற் சைவ
நூலிருக்கப் புறம்புமத நூனுழைந்து
முயற்கொம்பு தேடிக் காணும்
மாவிருக்கு மனத்தவருஞ் சிவஞான
வாழ்வுபெற வைத்தா னென்றன்
பாலிருக்கு மன்புடையான் பாலிருக்குஞ்
சொல்லுடையான் பரோப காரி. 4

குறிப்பு–†மருட்பானம்-மேனாட்டு நாகரிக லாகிரி முதலியன.

நலம்பிறங்கு மியற்சைவ ஞானநூல்
பலவுணர்ந்த நலத்தன் சங்கத்
தலம்பிறங்கு நூலனைத்துந் தரம்பிறங்கத்
துலைநாப்போற் சாற்று சாந்தன்
குலம்பிறங்கு பூமாதும் நாமாதுங்
கூடிவாழ் குணக்குன் றேன்மன்
புலம்பிறங்கு புவிப்புலவர் புகழெடுப்ப
"அறிவுநெறி" புகன்றிட் டானே. 5

சுந்தரஞ்சேர் சொற்கள்பல சுவைபலசேர்
பொருட்கள்பல தொடுத்தி யாத்த
செந்தமிழ்சேர் வெண்பாக்க ளூற்றிரண்டு
செய்தானென் குருவாய் நிற்போன்
செந்துவர்வா யுமைபங்கன் சிவபெருமான்
திருவருட்சீர் துள்ளி யாட

நந்தமக்கோ ரெளிதாக நன்களித்தான்
ஞானநூ லாமிந் நூலே. 6

வ

திருச்சிற்றம்பலம்.

## இந்நூலைப் பதிப்புச் செய்தவரும், சிவஞான நூல்களையே ஆய்வு செய்வாரும், முன்பு கூனூரில் கட்டிட வேலையினைக் கைக்கொண்டிருந்தாரும், இப்பொழுது வெல்லிங்டனில் வசிப்பவருமான திருவாளர், அரிசிக்கார, ஆ. கருப்பண்ண பிள்ளையவர்கள் எழுதிய மதிப்புரை.

இவ்வறிவுநெறி நூலாசிரியர் திருவாளர், N. இராமசாமிப் பிள்ளையவர்களைப் பல ஆண்டுகளாக யான் அறிவேன். மதுரைத் தமிழ்ச்சங்க புலமையுடன் அத்துவித சித்தாந்த சைவ நூற்புலமையும் உடையவர். ஞான நூலொன்று தெள்ளத்தெளிய வெளியிடுமாறு அவர்களிடம் பன்முறை யான் சொல்லியதுண்டு. பல நாட்களாக யான் சொல்லிவந்த பயன் பலித்ததென்று சொல்லுமாறு 102 வெண்பாக்களில் எளிதுணர்சொல்லும், அரிதுணர்பொருளுமாக 'அறிவுநெறி,' என்னும் நூலை முற்றுப்பெறச் செய்தார்கள்.

இவ்வுலகத்தில், ஒவ்வொருவரும், உலகம், உயிர், கடவுள் என்னும் முப்பொருள்களின் இருப்பைத் தெரிந்துணர்தல் மிக்க உரிமையான கடமை. உலகத்திலுள்ள பொருள்கள் தோன்றி நின்று மாய்ந்து மாறுகின்றன. இம்மாற்றத்திற்குக் காரணமாகிய பொருள், உலகங்களின் வேருதல் வேண்டும். அப்பொருள் கடவுளே. கடவுள் உருபியல்லர், அருபியல்லர், உருபாருபியு மல்லர். இவர் இப்பண்புக் கப்பாற்பட்டவர். திருவருள் ஞானத்தை அவருக்கு வடிவாகக் கொள்வதுமுண்டு. உயிருக்கும், கண்ணுக்கும் சூரியனுக்குமுள்ள தொடர்புபோல, உலகம், உயிர், கடவுள் என்னும் முப்பொருள்களுக்குந் தொடர்புண்டு. உயிர் கண்ணையின்றிக் காணுதல் இயலாது. கண், உயிரின் முனைப்பின்றிக் காணுதல் இயலாது. இவ்விரண்டும் சூரியனையின்றி இயலாதனவே. (ஈண்டு, சூரியனேடொப்ப எனையிரு சுடரினையுங் கூட்டிக்கொள்க.) உலகம், உயிர், கடவுள் என்பனவற்றையே சிவஞான நூல்களில் மாற்றிப், பதி, பசு, பாசமெனக் கூறும்.

உலகத்தில் இலக்கிய இலக்கண தருக்கமாகிய கருவி நூல்கள் கற்பதனைத்தும் முப்பொருளுண்மை கூறுஞ் சிவாகம நூல்களைக் கற்றற்பொருட்டேயாம். இஃதன்றி "குவிந்த இருள்போலுங் குழல். கவினுங் கமலம்போலும் முகம். கயல்போலுங் கண். வில்லுப் போலும் புருவம். முத்துப்போலும் பற்கள். குமுதம்போலும் வாய். செம்பொற் செப்புப்போலுந் தசைப்புடைப்பு." (அதாவது கொங்கை) என்பனவாதிய அசத்துப் பொருள்களின் அலங்கோலங்களை அணி வகுப்பதற்கின்று. இதுவுமன்றி இக்காலத்துக் கல்வியெனவும், கலாசாலையெனவும் புனைந்துரைப்பட்டைத்துப், பௌதீக, லௌகீக, அறிவுமாத்திரமே புகட்டி, பெறுதற்கரிய மானுடயாக்கையைப் பெற்றதன்பயன், அதனைக்கொண்டு நிலையிலா வாழ்வில் நிலையிலாப் பொருளைத்தேடி, நிலையிலா வுடலையும், அதன் போகபோக்கியங் களையும் பெருக்குவதேயென வெண்ணி வாணுளை வீணுளாக்கி, லௌகீக விற்பத்தியந்திரங்களே போன்றுழலும் நம்மனோரிற் சிலர், பேசும் வாசாஞானம், நமது தென்திசை அவாந்தரத்திலடைந்த தீவினைப்பயனன்றி வேறுதெரிந்து சொல்வதற்கு இடமில்லையாக நிற்கின்றது. உயிர்களும் அனுதியே கூடி நின்ற அருளகத் தடங்கிப் பேரின்பங்களினை யடையாது உலகத்தில் மாறுதலடையுஞ் சிற்றின்பங்களில், தார்விப் பாடுபெறுதலில், ஒருகாலெய்தும்வைக்கு, மன வாக்குக் காயங்களால் துன்பமுற்றும், அவை யெய்தாக்கால் இருமையின்பமும் இழந்து இடர்படுதலே கைப்பலனுக நிற்கின்றன. இந்நிலையில் சிவஞான நிலை பொருந்தலென்பதில்லை. தனு கரண புவன போகமான உதவிக் கருவிகளனைத்தும் இறைவன் நிலையினை யுணர்ந்து இன்புறற் கல்லாமல், தீவினைச்செயலிற் றிளைத்து நாட்கள் கடத்துவதற்கின்று. சிவாகம நூல்களனைத்தும் முப்பொருளுண்மை கூறி உயிரினை இறைவன் திருவருட்பேற்றில் பதிப்பிக்கும். ஏனைய மாயாவாத முதலிய புறம்பு நூற்கள் முன்னொடுபின் மலைவுகூறித் தாமும் முரண்படுவகைக்கண் அமைந்து தாம் உதவாமல் ஆனதுவுமன்றி யுற்றுணர்ந்த உயிர்களைப் பின்னும் பிறவிக் காளாக்கி அல்லலிற் புகுத்தி நிற்பனவாகும். உயிர்க் கொலைகளை யுடம்பாட்டுச் செயலாகக் கொண்டொழுகும் புறச் சமயிக ளிருவர் கூட, 'அல்லா' என ஒரு கடவுள் உண்டு, 'கருத்தன்' என் ஒரு கடவுள் உண்டு, என்கிறார்கள்.

மாயாவாத, ஏகான்மவாதக் கூட்டங்களோ, நான் பிரமம், என் பெண்டிர் பிரமம், என் பிள்ளைகள் பிரமம், ஆடு பிரமம், மாடு பிரமம், கோழி பிரமம், குஞ்சு பிரமம் ஆதிய அனைத்தும் பிரமமென

மருளுந் தெருளுமுடையோராய், "திருவடிப் பிழை" என்னுங் குற்றத்தின்பாற்பட்டு நிரயத் துன்பங்கட்கே யாளாகி நிற்கின்றன. சிவநிந்தை, வேதாகம நிந்தை, முதலியன திருவடிப் பிழையாகும். இதற்குப் பிராயச்சித்த மென்பதில்லை. "பிழைப்ப னாகிலுந் திருவடி பிழையேன்" என்னுந் தேவாரத்தாலும் உணரலாகும்.

பிற்காலத்து ஆன்றோரும், "சிந்தை யறியார்க்கீது போதிப்ப தல்லவே செப்பினும் வெகு தர்க்கமாம்" என்றருளினராவர். பருவ மகளும், பருவ மகனுங் காதற் குறிப்புணர்ந்து கலப்பார்களன்றி அல்லாத ஏனையோர் அருகராவாரல்லர். அதுபோல, சிவபுண்ணிய முதிர்வில் இவ்வத்துவித சித்தாந்த வுண்மை விளங்க வருமன்றி, வெள்ளிடை மலைபோல காட்சிப் பிரமாணமாகக் காணத்தெரிவதொன்றன்று. ஆகவே இவ்வறிவுநெறி நூல், முப்பொருளுண்மை நிலைகளை மிக இலேசாகச் சுருங்கச்சொல்லி விளங்க வைத்துப் பேசுவதால் தமிழ்ப் புலவ ருலகமன்றிச் சைவ உலகமும் போற்றிப் புகழ்தற்குரியதே. இன்னும் உரை நடை நூலாக இம் முப்பொருளுண்மைகளைப்பற்றி இந்நூலாசிரியர் வெளியிடின் அனைவருக்குமுண்மைகள் எளிதில் விளங்கவரும். திருவருளுந் துணைபுரிதல் வேண்டும்.

முற்றும்.

---

உ

## முகமனமைப்பு.

### இந்நூல் வெளிவர, கோயமுத்தூர், திருவாளர், C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் செய்த, சில அரிய பெரிய நலங்கருதி,

### நூலமைத்தார், நன்றி, நுவலுதல்.

**6 சீரடி.**

பாக்கிழா அ ரெனமுன்னு *ரைரையெடுத்த
பாவலர்பாப் பரண்மீ தாக
நாக்கி ழாஅ ரெனச்சொல்லி னயங்காட்டு
மவர்புலர்ந்து நழுவத் † தெய்வச்
சேக்கிழாஅர் முதலுதவச் சேக்கிழாஅர்
வாய்மலர்ந்த திருப்பா வென்றும்
||பூக்கிழாஅர்க் காகதிருச் சேக்கிழாஅர்
நிலையமதும் ‡ புனைசீ ரோனே. 1

குறிப்பு-*உரை-புகழ். † தெய்வச்சேக்கிழார்-சிவபெருமான்.
||பூ-பூமி. ‡ புனைதல்-செய்தல், உண்டாக்குதல்.

தேவாரஞ் சலியாமற் றினமோத
　　வோர்பாட சாலை செய்தோன்
பூவாரம் பரமனுக்குப் * புலர்வுபடு
　　மெனநினைந்து புனிதச் சொல்லாற்
பாவாரம் பலபுனைந்து சிவபெருமான்
　　பாதமலர் பரவுஞ் சைவ
† மாவாரன் சிவஞான மகிபாலன்
　　மணிமொழியான் மனநல் லானே. 2

குறிப்பு-* புலர்தல்-வாடுதல். † மா-பெரிய, வாரம்-அன்பு.

ஊனடைந்த வுடற்பிறவி வினைகழன்று
　　பரிபாக மொக்குங் காலந்
தானடைந்த வுறுதிதனைச் சாருமென்ற
　　துண்மையா * முண்மை யின்றே
தேனடைந்த மலர்ப்பொதும்பர்த் தில்லையிலே
　　கருணைசிவ காமி காண
மாநடஞ்செய் வரதர்திருத் தாடொழவென்
　　றருள் † பெரியர் ‡ மரபு வந்தோன். 3

குறிப்பு-* உண்மையின்றே என்பதை-உள், மை எனப்பிரிக்க.
† பெரியர்-பெரிய புராணச் சேக்கிழார் சுவாமிகள். ‡ மரபு-குலம்.

கோவைவரு பதிநூலே *குறிக்கோளாத்
　　தானுணர்ந்த குணக்குன் றேன்முன்
கோவைவரு மறிஞர்தமிழ்க் கோவையெனப்
　　புலன்மாட்சி கூட நிற்போன்
கோவைவரு தமிழ்ச்சங்கத் ததிபதிசுப்
　　பிரமணியக் கோமா னெற்குக்
கோவைவரு மறிவுநெறிக் குதவுநன்றி
　　பாராட்டிக் கோடற் காமே. 4

குறிப்பு-முதலாவது அடியிலுள்ள கோவை என்பதனுக்குத் தொடர்ச்சியாக வருகின்றவெனவும், இரண்டாவது அடியிலுள்ள முன்புள்ள கோவை என்பதனுக்கு வரிசைப்பட வருகின்றவெனவும், பின்புள்ள தமிழ்க்கோவை என்பதனுக்குத் தமிழரசுவெனவும், மூன்றாவது அடியிலுள்ள கோவை என்பதனுக்குக் கோயமுத்தூர் எனவும், நான்காவது அடியிலுள்ள கோவை என்பதனுக்குப், (பதி பசு பாசக்) கோப்பமைந்த வெனவும் பொருளமைவு செய்க.

* குறிக்கோள்-பாராயணம், மேன்மைப்பாடு.

உ

கணபதி துணை.

# அறிவு நெறி.

---

## தில்லைக்கற்பக விநாயகர்.

நல்ல கருணை நயப்பான் முதன்மகனும்
வல்லபனைக் கற்பகனை வாயாரச்—சொல்லித்
துதிப்ப னறிவுநெறிச் சுத்தநிலை பெற்று
மதிக்கமதி வல்லா ருவந்து. 1

### இதுவுமது.

அற்பகத்து வெண்பாப்பா வாக்குஞ்சீர்த் தில்லைவாழ்
கற்பகத்துப் பொற்பதமே காப்பு. 2

குறிப்பு. அன்பு, அகம்—அற்பகம்.

## தில்லைத் திருவம்பலவாணர்.

ஞானசிவ காமிதிரு நாட்டங் களிகூர
ஆனதிரு வம்பலக்கூத் தாடுபிரான்—ஞானத்
திருவருளை முன்னடத்திச் செந்தமிழ்ச்சொ லெற்குத்
தருமருளைப் பின்னவனுஞ் சார்ந்து. 3

## மன்னார்குடி வித்தியா குரு வணக்கம்.

(தாத்திய—கிட்டின செட்டியாரவர்கள்)

சாத்திரத்து ஞானந் தழைப்பத் தமிழ்கொடுத்தான்
தாத்திய கிட்டினப்பேர்ச் சற்குரு*மான்—நேத்திரத்தான்
இன்னு னடிக்கமல மென்மனத்துப் பூக்கமலம்
பொன்னுக வைப்பன் பொதிந்து. 4

குறிப்பு. *மான் என்பது ஈண்டைக்கு மஹான்எனப் பொருள்படும்.

R6 N34
85860

## அவையடக்கம், வேண்டாமை.

கற்ற பெரும்புலவர் காண வடக்கமொழி
சொற்ற லெமக்கிங்குத் தோன்றவிலை—தெற்றெனவே
பிள்ளைப் பெயரியல்பிற் பெற்றே னெனப்பெரியர்
கொள்வர் நலமெனவே கொண்டு. 5

## நூல்.

சீவன் சிவமுலகு சேர்ந்துவரு மூவகைகள்
மேவித் தெளிந்துணர்வர் மேன்மக்க—ளோவியம்போ
லொன்று முணரகிலா வூமப் பிறவியுட
லென்றும் பயனிலதா மெண். 6

கண்ணுக் கொளிகிடந்துங் காணகில்லா தாமாக
எண்ணிற் பருதிதீ யேலவொளி—நண்ணச்
சிவஞ்சீவற் காகத் திகழுணர்வு தீட்டிப்
பவங்காட்டிப் பாரிக்கும் பார். 7

காணுலக முன்னுக் கடவுணிலை பின்விளங்கிக்
காணுறுவ தெங்குங் கருதுநிலை—சேணறிய
நிற்குஞ் சிவநிலைதா னேரறிய நில்லாதே
கற்குஞ் சரக்கில்லை காண். 8

அருட்பெருக்குச் சத்தி யணைந்து சிவந்தான்
மருட்குளுயிர் மன்னுதே வாழக்—கருக்குட்
புகுத்தித் தனுபுவன போகங் கரணம்
வகுத்து வழியளித்தான் வந்து. 9

அறிவுக் கறிவாய்ச் சிவங்கன்ம மெங்கும்
பிறிவுவர லின்றிப் பிறங்குங்—கறுவும்
விதியே மதியாய் விடப்பொருந்துங் காலம்
பதிசிவத்திற் றுன்பதியும் பார். 10

†தீயாற்றிற் பாலந் திறத்துவர *முடியான்
போய்வந்து செல்லும் புதுமைபோல்—மாயத்து
வாழ்க்கை துணையா மனத்தமைத்து நன்னெறிக்கண்
ஆழ்க்கை யுயர்ந்த வறிவு. *முடி—மயிர். 11

குறிப்பு:—†தீயாற்றில் முடியால் பாலம் திறத்துவரென இயைக்க.

கன்ம முயிரைக் கசக்கிப் பிழிந்துபினுஞ்
சன்மஞ் சமைத்துச் சவம்படுத்தும்—நின்மலத்த
தெய்வங் கருதிச் சிவஞானச் சீர்நினைவர்
உய்வா ருயிர்வி லுயர்வு. 12

உருவங்க ளோர்தரத்த வுள்ளுயிர்க ளன்ன
திருகுஞ் செயற்*கேது தேரார்—பெருகும்
நல்ல வறிவாளர் நாடி நுனித்துணர்ந்து
வல்லதவஞ் செய்வர் மதித்து. 13

*ஏது—காரணம்.

எல்லாம்பொய் யென்ப தெளிதெவருந் தான்சொலுப
வெல்லாம்மெய் யென்ப தரிதெவரும்—நில்லாக்
கதிரவற்கு மிக்காந்தி காண்பதனுக் கின்று
மதிநிலைக் கென்னமைப்ப வந்து. 14

இல்லை கடவு ளெனச்சொன்னான் மீதுபடக்
கல்லெறிக் கண்டது நோவென்ன—வொல்லையே
காட்டு பிடித்தென்னக் கண்காண்ப தில்லையென்று
நீட்டிவிரித் தான்கையை நேர். 15

உண்டு கடவு ளெனவுரைப்பிற் காட்டுகென்றான்
கண்டுன்னைப் பெற்றாளைக் கைகூப்பித்—தெரண்டன்
பிறப்பிடங்காட் டென்றுநீ பேசுக யான்பின்
திறத்துரைக்கு மென்றான் தெரிந்து. 16

விலைக்குச் சிவம்வாங்க வேண்டா விளங்கும்
மலைக்குவிளக் கைநோக்கும் மாட்சி—நிலைக்கச்
சுருதிநல் லுத்தி யனுபவமூன் றானுங்
கருதினரே முன்னையருங் காண். 17

அன்னை நலமிழையாப் பிள்ளை யறநெறியில்
மன்னக் கருதும் மனக்கவல்—வென்னக்
கருணைக் கடவுள் கவன்று முயிர்க்குத்
தருணத் தருளைத் தரும். 18

திருநீறு கண்டி திருவெழுத் தைந்துங்
கருநீறு கண்ட மருந்தா—மொருநீராய்
வெந்தபடம் போல விதிச்செயலுந் தான்வருத்தா
தந்த*குனூர் வெய்யிற் றரம். 19

குறிப்பு. *கூனூரில் வெய்யில் உண்டு என்பதற்குமில்லை. இல்லை
யென்பதற்குமில்லை. ஆகவே, வாதியாவென்பது கருத்து.

இருப்புக்கோ றீவாயி விட்டுடம்பு சுட்டுக்
கருப்புப் படலங் கழற்றல்—விருப்புபிதா
துன்பத் தொடக்குத் துடைத்துச் சிவமதுதான்
இன்பைத் தரும்பிற்றை யிங்கு. 20

அங்கம் பலவு மமைய நயனமே
எங்கும் பொருள்காட்டு மீதியல்பு—துங்கப்
பரந்தமத மங்கம் பரமேச் சுரனிற்
கரந்தசைவம் கண்ணெனவே காண். 21

*புராணக் கதைபுகலிப் பூரணன்சீர் நாட்டிப்
பராவப் பகர்ந்துவரு பான்மை—விராவவே
தீதிழைத்தான் றன்னை யொறுக்கா தவனிழலைக்
கோதுறவே தானொறுக்குங் கோள். 22

குறிப்பு. *புராணக்கதை முதலியனகொண்டு கடவுளினது பரத்
துங்கூறமுடியாதனவே. ஆகமநூல்களே பரத்துவமெய்
மைகூறி விளக்குவிக்குமென்பது கருத்து. புராணக்கதை
கொண்டு பரத்துவம் தாபித்தல், தீங்குசெய்தானைத் தண்
டிக்காமல் அவனது சாயையாகிய நிழலைத்தண்டித்தல்
போல என்பதனைப், பின்னிரண்டடி விளக்குகின்றன.

போதத் திறம்புகலும் புண்ணியச்சீ ராகமங்கள்
கேதங் கடத்திக் கிளர்வுசெயுஞ்—சேதம்
புனைந்தகதை பாப்படித்துப் போதொழிப்ப புல்லர்
வனைந்த சுமையாம் மயல். 23

நம்மான்ம போதத்தா னுடித் தெரிபொருள்கள்
அம்மாவெக் காலு மழியுமவை—சும்மாநீ
என்று நிலைக்கு மெனற்கனவு பேதமையே
நின்று நிலைகுலையும் நேர். 24

காணுங் கணுபேய்த்தேர் காணற்கொன் றில்லாவே
தோணும் பொருளில்லை சொல்லவரின்—மாண்விலாப்
பொய்ப்பொருளிற் சிக்கிப் புரளா துயர்ஞான
மெய்ப்பொருளின் மேவல் விரும்பு. 25

நற்பசும்பா னல்ல கலம்பெய்த லில்லாது
கற்பொந்திற் றூன்கவிழ்த்தல் காணுவபோன்—முற்றுந்
தவத்துக்கு வந்த தகையர் மனித்தர்
அவமிருக மல்லா ரறி. 26

மழையைக் கரத்துக் குடைதடுத்து மாற்றும்
பழவிதியைச் சீரருளாற் பாற்றி—விழைவிற்
சிவானுபூதி கத்துச் செயலாற் றடுத்துச்
சுவானுபூதி கத்திருப்பர் சூழ்ந்து 27

வினைக்குத் தகைய விளைவுணர நம்பால்
முனைத்துச் சிவனார்முன் னின்று—மெனைத்துமே
சாத்திரத்திற் சார்த்தி முடித்தா னிவர்த்திதரும்
பாத்திரமு மாகமமே பார். 28

நாம்பிரம மான நவைமீ மதம்புகுந்து
சாம்பிரம மாகிநீ சாவாம—லாம்பிரமந்
தில்லைப்பொன் னம்பலத்துத் தெய்வந் தொழுதெழுக
எல்லையிலா வின்பே தரும். 29

தக்கன வின்ன தகாதன வின்னவென
ஒக்க வுணருபவ ருன்னதரே—மக்கள்
நுனித்த வுணர்வி னுணுக்கித் தெரிவார்
சனித்தற் றவத்துக்காச் சாற்று. 30

இனித்த தமிழி லெடுப்புப்பா மூவர்
*கனித்த தமிழ்மணியுங் கண்டார்—நனித்த
கருணைச் சிவத்தினைக் காட்டும் பதிநூல்
குருணை பிறநூற் குலம். 31

குறிப்பு. *கனிந்த என்பதன் விகாரம் கனித்த, என்பது.

உள்ளத்து நாவா யுரத்துத் துணையானே
தெள்ளுந் தமிழ்ச்சலதி நீந்துதிரு—வள்ளுவரும்
கற்றதனு லாய பயன்கடவுட் டாளிணையே
உற்றார் தொழுகென்று ருற்று. 32

புண்ணியபா வம்மிரண்டும் பொன்னிரும்பி னும்விலங்கே
எண்ணிடுக வேண்டா வெனவியம்புந்—திண்ணூல்
பதியறங்கள் பாசங் கழுவிச்சீர் பண்ணும்
துதிவரங்கள் வேறில்லை சொல். 33

வாக்குமனங் காயம் வருவிக்குங் கன்மமெலாம்
போக்கச் சிவாகமங்கள் புத்திவளர்த்—தாக்குவிக்குங்
கண்டதே காட்சியாங் கொண்டதே கோலமெனு
மிண்டர் விதிக்கென் மதி. 34

நம்முடற்கு நோயும்பின் னுமறியப் பன்மருந்தும்
அம்ம வுலகி லமைத்தபோ—லெம்மான்
வினையுஞ் சமைத்துப்பின் வீடச் சிவநூல்
தனையுந்தந் தான்கருணை சார்ந்து. 35

கற்றூர் வினையிற் கலங்கி வழுவுறினும்
உற்றுணர்ந்து தாந்திருத்த முற்றிடு—மற்றோர்
மிருகத் துணர்வு மிளிர்ந்துவிளை யாடலா
லோருகத்தும் வாரா துரன். 36

விதியே யெவர்க்கும் விலக்குலகி லின்றேற்
*சதியிற் பிணிமருந்து தானென்—மதிதனு
னன்குணர்ந்து நல்ல செயவிதிக்கு முன்னின்ற
தன்குணமுங் குன்றுமே தான். *சதி—சடுதி 37

தன்னுயிர்போன் மற்ற வுயிர்கடமை நோக்காது
பொன்னுயிர்போற் றன்னுயிர்ப் பூப்படுத்து—மின்னூர்
கருங்காகஞ் சுற்றங் கரைதலுங் காணூர்
மருங்கெவரும் வாராரே மற்று. 38

இழுக்கம் படைத்த லெளிதே நொடியில்
ஒழுக்கத்து வேண்டும்பன் னளே—வழுக்கியே
வீழ்தல் சிறுகணமே வீழாது தானடந்து
சூழ்தல் பலகணமே சொல். 39

கற்றுணர்ந்த சீலர் கலங்க வினைசுடினும்
உற்றுணர்ந்து தானினைப்ப துன்னதமே—நற்பசும்பால்
காயெரியிற் பல்காலுங் காய்ச்சினுந்தான் கேடுறுமோ
ஆயிடுமே நற்சுவையா யங்கு. 40

விரும்பு நிதியில் வெறுப்பாங் கலவிக்
கரும்புமொழிக் காரிகையுங் கைக்குந்—தரும்புனிதம்
என்றுஞ் சிவபோகத் தின்பமேன் மேல்வளரும்
பொன்றும் நிலையிலதாம் பொற்பு. 41

பூமகளும் வாழாள் புலவர்க்கேற் றிப்பழஞ்சொல்
நாமகளும் வாழும் நயப்பினல்—தாமே
மடச்சொற் பொருளன்றி வாய்ந்தசிவ ஞான
திடச்சொற் பொருளமையா தேறு. 42

ஏறுஞ் செயல்பலவு மிவ்வியல்பி னிற்றலின்றிப்
பாறும் நிலைகுலையும் பாடுபெறும்—வீறுதற்குத்
தாழ்ந்த செயலிற் றகைந்தபல வுயரும்
வாழ்ந்தவுல குக்கான வைப்பு. 43

தன்னுயர்வு தாங்கருதின் தாரணியிற் பல்லுயர்ச்சி
உன்னிலிவன் கீழே யுயர்வென்னை—பொன்ணெண்
கனவுச் செயலன்றிக் காணும் பயனென்
மனவு மொழிமனம் வை. 44

நாற்றச் சளிமலத்து நாடுமீ நம்முடியில்
வீற்றிருந்து கான்மிதிப்ப விட்டோமே—நேற்றுமுனம்
வைதா னிவருயிரென் வாய்க்கிரையே யென்பமித்து
*கைதானீக் கேன்தோற்ற காண். 45

குறிப்பு. *கைதான் ஈக்கு என்தோற்ற எனப்பிரிக்க.

நாளிலுயி ருள்ளத்து வாழும் நனவுபல
*தாளிற் றவறுவன தாங்கணக்கில்—†வேளிலிவன்
மீசை விரற்றிரித்து வீரம்பல் பேசுவதென்
ஆசைபே யாக்கும் அறி. 46

குறிப்பு. * தாள்—முயற்சி † வேள்—மண்.

கைப்பொருளி லின்புபலர் காணுபவென் னுள்ளவருங்
கைப்புவரத் தற்கொலைகள் காணுகிற்ப—இப்பொருளை
இல்லார் பறப்ப துருவ விரவுபகல்
நில்லா விதன்முடிபு நேர்ந்து. 47

* முடிகழிக்குங் கைக்கருவி முன்னம் பிறழ்ந்து
விடிலுடன் வெட்டுண்ணல் மேவும்—† படியிலே
செய்யுஞ் செயல்க ணிரைபிறழின் றீநெறிக்கண்
ணையுங்கண் ணீரா னனைந்து. 48

குறிப்பு. * முடி—மயிர். (நாவித வழக்கு) † படி—பூமி.

மாடுபல பூட்டிமுன்போன் மாட்டாச் சகடுபல
ஓடுங் *கொடிதருதீ யுண்டுரையே—நாடிடினுங்
காலந்தா ளுட்குநாட் கடுகிக் கழன்றிடுமே
†சீலத்தைக் காட்டுந் திறம். 49

குறிப்பு. *கொடியென்பது, மின்சாரமும் தந்தியும்.
மாடுகட்டாவண்டியென்பது, மோட்டார்.
†சீலம்– (புது) நாகரிகம்.

மேனாட்டுக் காரில் மிதப்புவரப் பஞ்சணைபூத்
தானட்டிச் சென்ற தனிகர்கள்—ஊனாட்டுங்
காலினிலங் கீறுவரக் கண்கவிழ்த்து நீர்துளும்ப
மாலுறுத்துந் தான்வினையும் வந்து. 50

பொன்னும் புகழும் புலமை குணஞ்செயலும்
மன்னுங் கணங்கணத்தின் மாறிடுவ—முன்வினைகள்
நம்மு ளுயிரடங்கி நம்மைச் சுழல்வித்துப்
பொம்மையென வைக்கும் புறம். 51

முன்பிறந்த மக்கள் முடிந்தா ரினிநாமும்
பின்பிறந்தே மென்றுநலம் பேணவிலை—அன்பிறந்த
இன்னார்பூப் பாரமா மென்பதலா லென்பயனோ
கொன்னே யுயிர்விடுப *கோள். 52

குறிப்பு. *கோள்—இடையூறு.

படித்துப் பிறர்நூல் பழகிப் புலமை
முடித்து விளங்கு முறையிற்—றடித்துணர்வு
வல்ல னெனச்செருக்கு வந்திடுதல் மாமடமை
புல்லனென்ப யாரும் புதிது. 53

நாடகமுங் காவியமும் நாடும் புராணச்சீர்
கூடகமு முண்மைநிலை கொள்வதிலை—தேடகமும்
இன்னதெனக் காட்டு மிறைவன் சிவாகமங்கள்
உன்னதமென் றேயுணர்க வுற்று. 54

கத்துங் கடற்கரைக்குக் கைநீந்தி வந்ததோர்
சித்திரமே யிப்பிறவி தேறுங்கால்—மெத்திமெத்தி
வஞ்சகம்பொய் சூதுபல வைத்துவைத்து *நாணடத்து
நெஞ்சர் மனிதரலர் நேர். 55

குறிப்பு. *நாள் நடத்தும் எனப்பிரிக்க

சின்னாளிற் பலபிணிக்கட் சிற்றறிவு வாழ்க்கையினும்
பன்னூற் பெரும்பரப்புப் பாடேவனே—அந்நூற்கள்
எக்கா லறிந்துசிவத் தின்பந் தலைக்கூடும்
முக்கா லுணர்தல் முறை. 56

கொல்லுஞ் சினத்தரவைக் கொஞ்சிக்கொஞ் சிக்குலவி
அல்லுமெல் லும்வளர்த்த வாடவனும்—மெல்லக்
கடித்திறக்குந் தீவழியிற் கைவந்த செல்வம்
முடிக்குமித் தீயனுயிர் முன்பு. 57

அளகைக்கோ னென்ன வளவா நிதியின்
வளவருங் கானடையான் மாழ்ப—விளவ்வே
நின்று தனைமறந்து நெட்டுயிர்ப்பிற் றட்டழிவர்
என்றும் பணம்பா ரிடர். 58

நாற்சேனை முன்னர் நணுக முடிதரித்த
கோற்கா வலரெங்கே கொற்றமெங்கே—நாற்றிக்கு
வீரமெங்கே யன்னர் *விருப்ப மகளிரெங்கே
தீரமெங்கே போர்†யொளித்த தேர். 59

குறிப்பு. *விருப்பமகளிர்—வைப்பாட்டிகள். †ஒளித்த—மறைந்தன.
(இருப்புமகள்—மனைவி.)

சூகரங்கள் *பவ்வீக் குவைதுளுப்பித் தானருந்தி
ஆகரமாக் கொண்டுகளித் தாமாப்போற்—சேகரித்த
பல்பொருளைப் பல்லோர் பசியகற்றித் தாமருந்தாப்
பொல்லவரைச் சூகரமாய்ப் போற்று. 60

*பவ்வீ—மலம்.

மரம்*பூவின் மன்னி வளருகினு மோர்கால்
உரந்திருகி வேர்காய்ந் துலக்கும்—நிரந்தரத்துஞ்
செல்வப் பெருக்கிற் றிளைப்ப முழுகினுமென்
னில்லா விச்செல்வம் நினை. 61

குறிப்பு. *பூ—பூமி.

*முயல்வி லெவையும் முடியுமெனச் சொல்லல்
மயல்வே வினை†யெழுவாய் வாய்மை—அயில்வுவரப்
பண்ணுண் முயன்றூர் பயனொழிவர் சிற்சிலவர்
எந்நாளும் எய்வர் சுகம். 62

குறிப்பு. *முயல்வு—முயற்சி. †எழுவாய்—கருத்தா.

எல்லாம் விதியென் றிருத்தலோர் பேதமையே
நல்லாய்வுக் கான நமதுணர்க்கு—மெல்லவே
எட்டாம ணிற்ப விதியென்க * வேல்வமுயல்
கிட்டா விதியாய்க் கிளத்து. 63

குறிப்பு. *எலுவனவெல்லாம் முயற்சியென்க.

நாடகத்துப் பாட்டுவர நாப்பிறழுங் கீதங்கள்
வீடகத்துப் பெண்விழைவு வேட்டுவிக்கும்—மாடகத்து
மூவருரை வாசகங்கள் மூட்டி முழக்குவமேல்
சேவைக் கெதிராஞ் சிவம். 64

*கட்டழகு தான்மலிந்த காதலிதின் றூறுமலக்
கட்டுவரக் காணொருவன் காதலியான்—தட்டழிந்து
பேதை மயக்கிற் பிறழ்ந்தும்பின் வால்பிடிக்கும் 65
வாதைப் படும்மாயும் மற்று.

குறிப்பு.*கட்டழகுக் காதலியின் மலசலவீழ்ச்சிகளை, ஒருவன் நேரே பார்த்து யூகிக்குமாயின் அவள் மீதுவைத்த காமக்காதலை விட்டொழிக்க ஒருப்படுவான். மனிதமிருகப்பேதையான வன்றூன், அப்பொய்மயக்குக் கட்டழகிற் பிறழ்ந்து வால் பிடித்தல் போன்றுள்ள பின்நட்புக்களே செய்து, வாதைப்படுவான், அவளால் மாய்வான், எனப்பொருள மைத்துக்கொள்க. ஆகவே உடம்புத்தோற்றங்களனைத்தும் அசத்துப்பொருட்கள். சத்தல்ல வென்பது தாற்பரியப்பொருள்.

அங்கையோ டங்கை யுராய்ந்துப்பின் மோப்பார்க்குத்
தங்கைப் பிணத்தூமஞ் சார்மணமே—தங்கண்
புலைத்த மணத்து மலங்கசிவுப் பொள்ளல்
மிலைத்தமணத் தாவில்லை மேல். 66

தங்கைக்கீழ்க் கொண்டு தடவவரின் றாய்துவர
அங்கைநீர் கொண்டங் கலம்புபவால்—நங்கையார்
தோளின்பத் துய்ப்பிற்சுத் தங்க ளுடம்புவர
மூழ்குவரா னன்னீர் முகந்து. 67

உலகு சமைத்த வொருவ னெனத்தாம்
வலதுதாண் மேன்மடக்கி மால்ப—சிலவர்
வறுமைப் பகைசமர்க்கு வந்தெதிர்ப்பின் தோல்வி
சிறுமைப் *பழங்கறுப்பன் தேர். 68

குறிப்பு. *பழையகறுப்பனே கறுப்பன் என்பது உலகப்பழமொழி.

துன்ப முழப்பின் றுணைதெய்வ மென்பார்பின்
னின்பத் திருப்பின்*பொச் சாப்புவரும்—மன்பதைகள்
நோய்க்கு மருந்து பெரிதுவந்து நோக்குமே
வாய்த்திலரென் றுன்ப மருந்து. 69

* பொச்சாப்பு—மறதி.

(கூனூர் மோக்ஷம்)

வானூரு முத்தி வகுத்தநூல் விட்டகுறை
கூனூரின் முத்திவழி கூறவரின்—*வேனிற்
குடிகடிபெண் மூன்றுங் குறிஞ்சிமுத்தி †யென்ப
‡அடிகளிவர் சாத லறம். 70

குறிப்பு. *வேனில்—அழகு, பொலிவு. †என்ப (சிலர்) கூறு வார்கள். ‡அடிகள்—இப்பெரியோர்கள்.

குறும்புப் படிப்பமைந்த †குய்யமுடை யோரை
துரும்பாய் மதித்திடுவர் தூயோர்—கரும்புமொழி
நின்ற *மனத்தர் நிறைகல்விச் சீர்த்தகுணக்
குன்றெனவெ கொள்ளு முலகு. 71

குறிப்பு. *மனத்தரை என உருபு விரிக்க †குய்யம்—கபடம்.

கல்வி யணவாக் கயவர்ஞா லந்துறந்து
மெல்ல நழுவுதலு மேன்மையே—நல்ல
செயலுந் தெரியார் சிவன்சீவ னுந்தெரியார்
மயலில் வளர்வரிவர் மற்று. 72

கண்டு முகமலர்ந்து கட்டிச்சீ னத்துக்கற்
கண்டுமொழி பேசிக் கனிந்திடுவர்—மண்டியவர்
போயிற் புறம்புமொழி பேசும்போல் லாதவர்க்குப்
பேயின்பெயர் பட்டப் பேர். 73

இறப்புத் தலையி லெவர்க்குந் தவறு
சிறப்புடற்குச் செய்கையுஞ் சின்னாள்—நிரப்புதுதான்
கொண்ட மனித்தருக்குக் கூறை யுணவுதவி
யுண்டிருப்பர் நல்லோ ருவந்து. 74

வாழ்ந்தவர் சின்னாளில் வாழ்க்கைத் திறங்கெடுவர்
தாழ்ந்தவர் சின்னாளிற் றலையெடுப்பர்—ஆழ்ந்தவினை
நின்றுயிரை யாட்டி நிறுத்திக்கீழ் மேலாக்கும்
நன்றுவர நல்வினையே நாடு. 75

(கம்பன் கற்பனை மறுதலை)

கலங்குங் கடன்பட்ட நெஞ்சத் துவமம்
இலங்கையர்கோன் சாருபொரு ளென்னே—வலங்கையவர்
பொன்னும்பெண் ணும்முதல போக்கி யுடலொழிநாள்
மன்னுங்கா லிவ்வுவமை மாண்பு. 76

காலம்பி ழைத்துவரப் பாலும்நோய் காட்டும்பார்
சீலஞ்செய் தார்பகையுஞ் செய்வரே—ஞாலத்தில்
வாழ்க்கைத் துணைமுதலா வந்தபிறப் புப்பலவும்
ஆக்குபவே யாகாப் பகை. 77

வறுமை வினையான் வரினுந் தமதாய்ப்
பொறுமை நினைதல் *புலமை—சிறுமை
செய்துபல வெல்லாந் திரியி னிவன்பின்னும்
எய்தும் வறுமை யிடர். 78

குறிப்பு. *புலமை—அறிவு.

முன்னே பிறந்த விடந்தனக்கு மோய்பமே
பின்னே பிடித்துவத்தல் பேரறிவோ—என்னேயோ
புன்புலா ஞற்றத்துப் பொங்கி வழியுமதே
அன்புலவி நிற்ப தவம். 79

எவர்தம் மனைவி யிடமிருந்து பேசுவரே
லிவர்புலிபோற் சீறி யெதிர்ப்பர்—கவர்விற்
பிறருரிமைத் தோட்கிவர்பின் பித்துதலை யேற்பர்
*மறவருமித் தீநெறிமன் ஞர். 80

*மறவர்—வேடர், படைவீரர்.

பண்பிறந்த சில்லோர் பணத்திற் கிடக்குங்கால்
கண்பிறழ்ச்சி வேறு கவினுமால்—மண்பிறந்த
சேதிதா ஞென்றுந் தெரியாத் திருவாளர்
நீதிதா னெண்ணுர் நினைந்து. 81

வட்டம் பணவடிவு வான்பட்டத் தாளுருவம்
எட்டும் படிநிற்ற லெங்குமில—கிட்டிவர
ஓடும் பறந்திங் குருளுஞ் செயலுணர்க
தேடும் பொருட் பயனைத் தேறு. 82

*பண்ணணைந்த வம்மிற்பா ரித்துவரு மிப்பொருளில்
எண்ணித்தீங் கெல்லா மிழைப்பநிற்கும்—கண்ணனைய
நல்லாரை வேம்பாய் நவிலுங் கடுகடுக்கும்
அல்லார் மகிழு மடைவு. 83

குறிப்பு. *பண் அணைந்த அம் என்னும் மொழி, பணம்.

*தன்மைப்பன் மைத்தன்மைச் சார்செல்வ மெப்பொழுதும்
நன்மை தருவதில நாடலுறின்—வன்மை
உயர்சிவஞா னந்திகழ்வுற் ரேங்குஞ் சுருதி
மயரறவே கற்றுணர்தல் மாண்பு. 84

குறிப்பு. *தன்மைப்பன்மை மொழி, செல்வம்.

வள்ளுவர்நன் னீதி வகுத்த லழகிதெனக்
கொள்ளலன்றி யுண்மை குறித்திலரே—தெள்ளிவரக்
மெய்கண்டார் போதம் விரித்தா †ரிருவரும்பின்
கைகண்டார் சைவநில *கண். 85

குறிப்பு. † இருவர்—அருணந்திசிவமும், உமாபதிசிவமும். *கண்—நேத்திரம். இம் மூவாருளிய சாத்திரங்களுங், கண்போன்ற அமைவுபெற்று நிற்கின்றனவென்க.

பத்துப்பாட் டும்முதலாப் பாரித்த முன்னூலின்
வித்தகமுஞ் சித்திரமாம் வேண்டையே—எத்திறத்துஞ்
சீவன் சிவனுலகு தேறுஞ் செயல்கழறு
பாவலர்முன் சொற்சுமந்த பண்பு 86

காப்பியநன் னூன்முதலாக் காரிகையாதித் திறமும்
தாப்பிசையாய்ச் சொற்பொருளைச் சாரவைக்கும்—ஒப்புதலுக்
கிந்நூல் கருவியா மன்றிச் சிவங்காட்டல்
மெய்ந்நூற்†சி வாகமங்கண் *மேவு. 87

குறிப்பு. †சிவாகமங்களாம், என முடித்துக்கொள்க.
*மேவு—அச்சிவாகமங்களை விரும்பு.

கம்பன் கவித்திறச்சீர்க் கண்டுகளித் தாற்பயனென்
*செம்பொருளின் சீர்செப்பி நின்றதிலை—யம்புவியில்
கற்பனையுஞ் சொல்லுங் களிப்ப வரும்பொருளும்
விற்பனமே வேறென் பயன். 88

குறிப்பு *செம்பொருள்—முழு முதற்கடவுள்.

*ஆகு பெயரணைந்த லன்மொழிக்கு நம்புலவர்
எகிக் கிளந்தசமர் என்னுற்றார்—வாகில்லா
நல்லசிவ ஞானமா நாட்டத்தி னின்றோர்கள்
வல்லர் மதிக்கு முலகு. 89

குறிப்பு. *ஆகுபெயரன்மொழித் தொகைகளைப்பற்றி வாதப் பிரதிவாதங்கள், முன்னடந்தேறின. அவற்றின்முடிவு வருமாறு- கனங்குழை எனுஞ்சொற்றொடரை நச்சினார்க்கினியர் அன்மொழித் தொகையெனக் கூறினர். பரிமேலழகர் ஆகுபெயர் எனக்கூறி னர். இருவருங் கொண்டபொருள் வெவ்வேறு. ந—ர், பொன்னு லாகிய மகரக்குழையினையுடையாள் எனப்பொருள் கூறுகின்றனர். பரி—ர், கனவிய குழையினை யுடையாளெனப் பொருள் கூறுகின் றனர். கனகத்தா லாயினமைப்பற்றிக், கனகங்குழை எனற்பாலது கனங்குழை என மருவியதென்பது, நச்சினார்க்கினியர் கருத் துப்போலும். கனம் என்பது குழையை விசேடித்ததெனக்கொள் ளின், பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பரிமேலழகர், உரிச்சொற்றொடர் எனக்கொண்டு ஐந்தொகை நிலைக் களமின் மையால் அன்மொழியாகாது, ஆகுபெய ராயிற்றென்ப தேனும், கனம் என்பது குழையை விசேடியாது அஃதுடையாளை விசேடிக்கக் குழையென்பதே அஃதுடையாளை உணர்த்தி ஆகு

பெய ராயிற்றென்பதேனும், இவர் கருத்துப்போலும். கனம் என்பது நிறைப்பொருட் குரித்தாயினும் ஈண்டைக்கு, இலக்கணையால் சிறப்புணர்த்தி நின்றது. அவரவர் கொண்ட பொருள்பற்றி அன்மொழி எனவும் ஆகுபெயர் எனவும் இலக்கணங்கள் அமைத்துக் கொண்டாரன்றி வழுவுபெற்றார் ஒருவருமின்று. (ந—ர். நச்சினார்க்கினியர்) (பரி—ர். பரிமேலழகர்.)

நம் நீதிமன்றங்களில் அவரவர்களின் செலவுகள் அவரவர்களுடனாக வழக்கு தள்ளுபடிசெய்யப்பட்டது. வழக்கினர் இருவருஞ் செல்கவென நீதிநியமனங்கள் நடக்கின்றமைபோல, இவ்வழக்கும் அவரவர்களின் பொருளேக்கத்தி லமைந்திருத்தலின் வெற்றியுந் தோல்வியுமில்லாது முடிபுகிடைத்தது. சிவாகம நூல்களின் வழக்கு இவைபோல வெற்றெனத் தொடுத்தலின்றி உயரிய பயனமையப்பெற்று முடிபுநிலைகொடுத்துச் சீவனைச், சிவத்திற் கூட்டுவிக்குமென்க. அமைக.

(வழக்கறிஞர் உலகத்தில் வாதனையுலகம்)

*சட்டத் துணர்விற் சமைந்தசிலர் தீமை
நட்டஞ் சொலமனமும் நாணுமே—பட்ட
குடிக்குப் புதுக்கூற் றெனவுடலுங் கொள்வார்
†அடிக ளறியா ரருள். 90

குறிப்பு. * சட்டத்......சமைந்தசிலர்—சில வக்கீல்கள். தீமை நட்டம்—தீவினைகளில் நர்த்தனம். (அதாவது—தாண்டவம்) பழங்கூற்று பணவிருப்பு இல்லாதவனாதலின். உடலை விட்டொழித்து உயிரைமட்டுங் கைப்பற்றுவன்.

புதுக்கூற்றாகிய இவ்வடிகள் உடலொழியின் பணம் பெறமுடியாதாகலின், அவ்விருப்பால் உடலுயிரிரண்டையுங் கைப்பற்றுவார்கள். யமவேதனை இவ்வுலகத்தும் அவ்வுலகத்தும் சில வுயிர்கள் அமையப்பெறுமென்பது திரண்டபொருள். யமவேதனை என்பது, இவர்களிடம் அகப்பட்டோர் படுங்கொடுந் துயரம் என்க.

†அடிகள்—சுவாமிகள், பெரியோர் என்பது ஈண்டைக்கானபொருள்.
இது இகழ்வுப் பொருள்படப், புகழ்ச்சொல்லாற் கூறியது.

மலர்த்த வனப்பு வடிவமைந்த மஞ்சத்
தலர்த்த முகத்த னவளும்—வலத்த
கலவிச் சமரக் களியாட்டிற் *கீழ்க்கா
லுலவி னுளங்கசப்ப றுற்று. 91

*கீழ்க்கால்—நச்சுக்காற்று.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புபல
ஏலுறவே நாமுண் டிருந்திடினும்—மாலில்
உருத்திரிந்து பிற்றை யுதிரவறைக் குப்பை
*கருத்திரிக்குந் துர்மணந்தான் காண். 92

*கருத்து இரிக்குமெனப்பிரிக்க.

*எக்காலுந் தாங்கண் டுவந்து†குதக் காலுலவ
ஒக்காமற் றுண்ட மொருங்கடைப்ப—ரக்காறுன்
போமளவு மிவ்வுடலப் பொல்லாச் செயனினைப்பர்
சாமளவு மித்துயரே தான். 93

*எக்காலும்—எக்காற்றையும். †குதக்கால்—மலக்காற்று, நச்சுக்காற்று.

பூழைச் சிறியவேழ் பொத்துவாய்க் கீழ்க்குதமும்
பேழைக் குதிருருவம் பேர்பீழை—*மாழை
மணத்த பலமணங்கள் வாய்ப்புறவே தேய்த்தார்
கணத்தளவே தான்காண்பர் காண். 94

குறிப்பு. உடற்பொள்ளல்களுள், பெரியதரம், வாயுங் குதமும். சிறியதரம், ஏனைய ஏழும்.

*மாழை - அழகு. †கணம் - க்ஷணம்.

ஊனுக் குதிர முறந்து திடந்திரளத்
தேன்பலவுங் கூட்டியே தின்றபினர்—*வான்வளர்ந்து
†முத்தம் ‡பொருத நகை||முயங்க முந்துறுவர்
எத்திறத்துங் காண்ப திடர். 95

குறிப்பு. *வான்—வலி. †முத்தநகை—பெண். (அன்மொழித்தொகை) ‡பொருத—ஒத்த. ||முயங்குதல்—புணர்தல்.

காணுப்ப ணோர்குதமீக் காணிதம்ப வாய்பரம்பி
மாணும னித்தராய் வந்ததனைத்—தாணு
நினைத்துப் பிறப்பு நிலையகற்று ரன்றே
எனைத்துமிவ ரெண்ணுர்தா னிங்கு. 96

குறிப்பு. உயிர்கள் பிறக்குந்தருணநிலையைக் குறித்துக்கொள்க.

கொன்றுபல சப்பிக் குதப்பிக் குடற்கிறக்கி
நன்றுவரப் பூசைமுத்தி நாடுமுறை—குன்ருக்
கரும்பொன் விழுங்கிக் *கடுஞ்சுக்குத் தின்ற
அருங்கதையே யாமா றறி. 97

குறிப்பு. இரும்புத்துண்டை விழுங்கினேனுக்கு, சுக்குமருந்து நியமனஞ்செய்த மருத்துவன்கதை குறிக்கப்பெற்றுளது. சீவகாருண்யமில்லாமல் ஊன்தின்பவர் சிவஞானம் பெற்றுச் சிவத்தை அடையமுடியாது என்பது, கருத்து.

*கடு—உறைப்பு.

கருவிநூல் கற்ற கணக்காயர் *கோட்டம்
மருவிப் பிறர்பிழையில் வாழ்ப;—வொருமையாய்
அத்துவித சித்தாந்த சைவநூ லாய்ந்தமைந்த
வித்தகர்வேண் டாரவர்தாம் வேறு. 98

குறிப்புகள். *கோட்டம்—பொருமை, வஞ்சகம்.

தன்னுயிர்க்கு மற்ற வுயிருடல்கள் சார்துணையே
தின்னுதற்கு வைத்ததிருத் †தெய்வமென்ப—தென்னே
புலிகரடி சிங்க முதலவுயிர்ப் போக்கும்
வலியவரு *செந்திவர்தம் வாய். 99

குறிப்பு. *செந்து—பிராணி. † தெய்வம் என்பது என்னே யெனப்பிரிக்க.

உண்ணுங் கலத்தி லுரோமம் புழுப்பலவே
நண்ணிற் சகிப்பிலர் நாணுபவே—யெண்ணி
உதிரப் பசைவறந்த வூனைக் கலமிடுபு
சதிரனு யுட்கொளுமே தான். 100

இந்நூலிற் சொன்ன வியல்புத் திறமிவற்றில்
முன்னூலிற் கண்ட முகப்புசில—வெந்நூலும்
தீதுயிர்க்கு வேண்டா வுலகத் திறம்பலவும்
கோதுவரு மென்னுங் குறித்து. 101

அத்துவித சித்தாந்த சைவத் தரும்பொருளின்
நித்தியத்தைக் கொற்றங் குடிநிமலர்—பத்தியத்தால்
செய்தார் சிவப்பிரகா சம்மெவருந் தேர்ந்துணர்க
மெய்யாகச் சொல்வதெவன் வேறு. 102

முற்றும்.

நன்ருக.

R6
N34
35864

உ

# விஞ்ஞாபநம்.

---

கோவைத் தமிழ்ச்சங்கம்,

## சு. நமசிவாயம்.

நமது தென்றிசைக்கண் முன்னம் பல பல சமயத் தாபனங்களேற்பட்டு ஒழிந்தனவாக வுள்ளன வென்பதற்கு அறிகுறியாக, "காம்பிரமம்" என்பார் மதம் முதலியவற்றுடன், திருவாளர், ராமசாமிப் பெரியார், (ஈரோடு) தாபித்துக் கூப்பாடு போட்டுக்கொண்டிருக்குஞ், சுயமரியாதை வியக்கத்தையும் ஒரு மதமெனவே சொல்லலாம். நம் கல்லூரிகளில், "நாலடியார்" "பழமொழி" முதலிய சமண நூல்களைக்கொண்டு மாணவர்களுக்கு நீதி புகட்டுதலினும், இந்த "அறிவுநெறி" போன்றுள்ள சிவஞான வெண்பாக்கள் பாடமாக ஏற்படின் மாணவர்களும் உலகத்தில், நித்த அநித்த நிலைமைகளுணர்ந்து உயர்நெறியில் ஒழுகுவதுடன் இழுக்கம்படைத்த போலிமத வியக்கநிலைகளுந் தகர்ந்து வீழ்வுபெறுவனவாகும். முன்னைய நூலாசிரியர்கள் சொன்ன கருத்துக்களையே இந்நூல் பன்னிப் பன்னிப் பேசாமல் வேறுதிறம்படப் புதுப்புதுக் கருத்துக்களிலேயே அமைந்து செல்லும் அழகை, அனைவரும் வியத்தல்கூடும். இப்புத்தகம், நூலாசிரியரிடமும், கூனூர், விக்டோரியா அச்சியந்திர சாலையிலும், வேண்டியவர்கள் விலைக்குப் பெறுதலன்றி, கோவைத் தமிழ்ச்சங்கத்தில் என்னிடமும் பெறலாம்.

